# தேவி கருமாரி அம்மன் திருவருட் பிரசாதம்







அரவிளைக்கும் முறை

1-00

ஸ்ரீ தேவி துணை

திருவேற்காடு
ஸ்ரீ தேவி
கருமாரி அம்மன்

# திருவருட் பிரசாதம்
# அரவணைக்கும்
# பிரார்த்தனை
# முறை




பதிப்புரிமையாளரும் வெளியிடுவோரும் :

**ஸ்ரீ தேவி கருமாரி அம்மன்**
**ஸ்வாமி நடேசனார் நிகேதனம்**

(Regd. No. S. 91/1963)

105, ஷண்முகராயன் தெரு, சென்னை-600 001.

## முன்னுரை

திருநீ றரவணைக்குஞ் சீர்முறையைச் செப்பக
கருமாரி சேவடிக் காப்பு.

—அருட்கவி கருமாரி தாஸர்.

“தொண்டை நன்னாடு சான்றோருடைத்து” எனத் தமிழ் மூதாட்டி ஔவையாரால் சிறப்பிக்கப் பெற்ற செங்கற்பட்டு மாவட்டத்தில் பூவிருந்தவல்லிக்கு அருகில் ‘வடமறைக்காடு’ என்னும் பாடல் பெற்ற திருத்தலமாம் திருவேற்காடு நம அன்னை ஸ்ரீ தேவி கருமாரி அம்மை கோயில் கொண்டு விளங்கும் புண்ணியப்பதி. பாண்டி நாட்டில் விளங்கும் ஸ்ரீ மீனாட்சி குறம்போன்று தொண்டை நாட்டில் ஸ்ரீ தேவி கருமாரி அம்மன் தொன்று தொட்டுக் குறம கூறி வருதல் அனைவரும் அறிந்ததே.

ஸ்ரீ சக்தி பஞ்சகிருத்தியம்போல் குளிர்நீர், சாம்பர் (திருநீறு), கனி, மஞ்சள்,வேம்பிலை ஆகிய மந்திர தந்திர, அநுபவ, உற்சாக, சம்பவத்தில் அவரவர் வினைப் பரிபக்குவத்திற்கேற்ப அம்மன் அளிக்கப்பட்டு வினை தீர்க்கப்பட்டு மக்கள் இன்புற்று ஸ்ரீ தேவியை வாழ்த்தி வாழ்கின்றனர். மேற்கண்ட குளிர்ந்த நீர், சாம்பர் (திருநீறு), கனி, மஞ்சள், வேம்பிலை இவைகளை யார் எப்படி, எப்போது அனுபவிக்க வேண்டும் என்று முறையை ஸ்ரீ அம்மன்

வாயிலாகக் கேட்டு அறிந்துரைத்த சான்றோர் ஒருவரின் உரைகளைத் திரு. புத்தனேரி இ. ரா. சுப்பிரமணியம் அவர்கள் ஆக்கிய உரைநடை இங்கு நூலாக அச்சிடப்பட்டுள்ளது. பிறர் உதவியின்றி தாங்களே சாம்பர் பிரார்த்தனை அரவணைக்கும் முறையைத் தெரிந்துகொள்ள இந்நூல் துணைபுரியும். அனைவரும் வாங்கிப் பயன் பெறுவீர்களாக.

ஸ்ரீ தேவி கருமாரி அம்மன்

சுவாமி நடேசனார் நிகேதனம்

உ

வடமறைக்காடு என்னும் திருவேற்காடு
திருத்தலத்தில் எழுந்தருளியுள்ள

## ஸ்ரீ தேவி கருமாரி அம்மன்

# பிரார்த்தனை முறை

மஹா சக்தி தோத்திரம்

### நேரிசை வெண்பா

சாம்பர் அரவணைக்கும் சாத்மீக மாந்தருக்கு
பூம்பணிதி பொன்னுடை போர்த்திடுவர்—தேம்
புடலில்
நோய்த்துன்பம் சேராது நோன்புநாற் பார்முன்னில்
பேய்க்கன்பம் நீங்கு மெனப் பேசு !

பாம்புருவம் போர்த்த பரம கருமாரி
சாம்பலணி யாதவர்தம் சார்புடலில்-வேம்பின்
இலையை யுகுத்தியவ ரீனமானம் போக்கித்
தலைவிளக் கேற்றி வைப்பாள் தான்.

பெ. சு. பாலராஜ பாஸ்கரனார்.

அண்டங்க ளெல்லாம் அணுவாக அணுக்களெல்லாம்
அண்டங்க ளாகப் பெரிதாயச் சிறிதா யினுனும்
அண்டங்க ளுள்ளும் புறம்புங் கரியா யினுனும்
அண்டங்க ளீன்ருள் துணையென்ப ரறிந்த நல்லோர்.

—பரஞ்சோதி முனிவர்

## திருவேற்காடு திருத்தலப் பெருமை

'பாருக்குள்ளே நல்ல நாடு—எங்கள்
பாரத நாடு'

என்றார் புதுமைக்கவி பாரதியார். பாரத நாட்டின் புகழைத் தொன்றுதொட்டுப் பாதுகாத்து வருவது செந்தமிழ் நாடு. இத்தமிழ் நாட்டின்கண் வாய்த்த 108 திருப்பதிகளுள் 32 சிவத்தலங்கள் தொண்டை நன்னாட்டில் துலங்குகின்றன. இந்த 32 சிவாலயங்களில் ஒன்றாக வைத்து எண்ணப்பெறும் பெருமை வாய்ந்தது வடவேதாரண்யம் என்னும் திருவேற்காடு.

திருவேற்காடு தருமமிகு சென்னைக்கு மேற்கே பூவிருந்தவல்லிக்குக் கிழக்கே, பாலிநதி (கூவம்ஆறு) அருகில் அமைந்துள்ளது. இளமுருகக் கடவுளால் பூசிக்கப் பட்டதாகத் தல வரலாறு கூறுகின்றது. இதனை மெய்ப்பிக்க வேலாயுத தீர்த்தக்கேணி ஒன்று இத்திருப்பதியில் அமைந்துள்ளதைக் காணலாம்.

சைவ சமய குரவர்கள் நால்வரில் ஞானசம்பந்தர், சுந்தரமூர்த்தி ஆகிய பெரியோர்களின் பாடல் பெற்ற தலம் திருவேற்காடு. அருணகிரிநாதரின் திருப்புகழையும் பெற்றது. அறுபான்மூவரில் ஒருவரான மூர்க்க நாயனார் அவதரித்த தலமும் இதுவாகும். பரமசிவன் பார்வதியோடு அகத்திய முனிவர்க்குத் திருமணக் கோலக் காட்சி தந்தது இந்தத் திருவூரிலே தான். அதே மணக்கோலத்தோடு மூலந்தான் மூர்த்தியாகக் காட்சியளிப்பது குறிப்பிடத்தக்கது.

எண்திசைப் பாலகரும், இலிங்க வழிபாடு செய்த புண்ணிய புரியும், வேதாகமங்களின் அடக்க நிலையாக விளங்குவதும் திருவேற்காடு என்னும் இப் பதியேயாகும்.

மகாபுண்ணிய பாலிநதிக்கரையோரம், வெள் வேல மரத்தின் கீழ் சிவபெருமான் உமாதேவியாருடன் வீற்றிருந்து சிருட்டி, திதி, சம்மாரம், திரோபவம், அநுக்கிரகம் என்னும் ஐந்தொழிலையும் நடத்தி வரும்போது அரக்கருக்கு அஞ்சிய தேவர்களின் அபயக் குரலைக் கேட்டு ஈஸ்வரன், உமையான வேற் கண்ணி அம்மையிடம் ஐந்தொழிலையும் இயற்றுமாறு ஆணையிட்டுத் தேவலோகம் சென்றதாகவும், அது முதல் தேவியார் திருவேற்காட்டில் பராசக்தியாகத் தியானத்திலமர்ந்து பஞ்ச கிருத்தியங்களையும் இயக்கி வருவதாகவும் வேதாகமங்கள் கூறுகின்றன.

பராசக்தி ஸ்ரீ தேவி கருமாரியம்மன் என்னும் திருப்பெயரோடு ஆதிபீடம் கண்டமர்ந்த இடம இன்று திருவேற்காட்டில் மாபெருங்கோயிலாகக் காட்சி தருகிறது. ஸ்ரீ வேதபுரீஸ்வரர் கோயிலுக்கு வட கிழக்கே சுமார் 3/8 கி.மீ. தூரத்தில் இத் திருக் கோயில சிறப்பாக அமைந்துள்ளது.

## 1. திருச்சாம்பர் அரவணைக்கும் முறை

ஸ்ரீ தேவி கருமாரி அம்மனின் சாம்பர் அர வணைக்கும் முறையைத் தெரிந்தால்தான் ஒவ்வொரு

சேவார்த்தியம் அவ்வாறே நடந்து பதினாறும் பெற்றுப் பெருவாழ்வு வாழ்வாரென நம்புகிறோம்.

அதிகாலை 5 மணிக்கு எழுந்து காலைக் கடன்களை முடித்துக் கொண்டு, குளிர்ந்த நீரில் நீராடி, காலை 6 மணிக்கு ஸ்ரீ தேவியின் சாம்பலை எடுத்துக்கொண்டு வாசலிலோ அல்லது கிணற்றுக்கு அருகிலோ அல்லது பூஜை அறையிலோ, இடது கரத்தில் பஞ்ச பாத்திரத்தில் தீர்த்தம்கொண்டு பாத்திரத்தைக் கீழே வைக்காமல் வலது கரத்தால் சாம்பர் கொஞ்சம் எடுத்து தீர்த்தத்தில் இட்டு கொஞ்சம் நெற்றியிலும் அணிந்து நான்கு திசையிலும் ஸ்ரீ தேவியின் திருநாமத்தினைத் தியானம் செய்து சாம்பர் ஊதி தீர்த்தம் அருந்தி சூரிய நமஸ்காரம் செய்ய வேண்டும்.

பகல் 12 மணி முதல் 12-30 மணிக்குள்ளாக கை கால்களைச் சுத்தம் செய்துகொண்டு கொஞ்சம் மஞ்சள் நீர்தெளித்துப் பின்னர், பஞ்சபாத்திரத்தில் தீர்த்தம் எடுத்து வநது அதனை கீழே வைக்காமல் காலையில் எவ்வாறு சாம்பலை அரவணைக்கிறோமோ அவ்வாறே செய்யவேண்டும்.

மாலை 6 மணிமுதல் 6-30 மணிக்குள்ளாக உச்சி காலத்தில் செய்ததுபோல் செய்யவேண்டும். இரவு 9 மணிக்குப் படுக்கப்போகும் போது தேவியைத் தியானம் செய்து படுக்கையைப் போட்டு நான்கு திசையிலும் சாம்பர் தூவி அரவணைத்து நித்திரை செய்ய வேண்டும்.

இவ்வாறே ஒவ்வொருவரும் 'தீட்டு திடுக்கு இல்லாமலும், வேளை நாழிகை தவறாமலும் உண்மை

உறுதியுடன் ஸ்ரீ தேவி சாம்பலையும், திருநாமத்தை யும் கோடிப பிரார்த்தனை செய்தால் பலவிதமான காம நோய்கள், வினைகள், வியாதிகள். பெண்க ளுக்கு வீட்டு விலக்கம் காலங்களில் ஏற்படும். பெரு வாரி இறைப்பு, வயிற்றுவலி, கை கால் குடைச்சல், இடுப்பு பின்னல், மயக்கம் மனம் சோருதல், நாளுக்கு நாள் உருவ மெலிதல், வேலை கிடையாத தொந்தரவு. பெரிய குடும்பத்தராயிருந்து அழித்தம, மந்திரம், ஏவல் வைப்பு முதலியவைகள் பரிபூரண மாகக் குணமடையும் என்பது திண்ணம்.

## சாம்பர் தயாரிக்கும் முறை

தூரதேசங்களில் இருப்பவர்களுக்கு ஸ்ரீ தேவி யின் சாம்பர்கிடைக்கவில்லை என்றால், அவர்கள் கீழ்க் கண்டவாறு தயார் செய்து ஆலயம் வந்து வாங்கிச் சென்ற சாம்பலுடன் கலந்து, எங்கு நின்றாலும் உண்மை உறுதியுடன் தேவியைக் கோரினால், அல்லல் அடைந்து அலையும் மக்களை மடியேந்திக் காப்பாள் என்பது நமது அன்னை திருக்குறம்.

பசுஞ்சாணம் எடுத்து வறட்டி தட்டி, சுத்தமான இடத்தில உலர்த்தி அவைகளை ஆதிவாரமோ, அல்லது சுக்கிரவாரமோ பகல் 12 மணிக்குமேல் வாசல் அருகே அல்லது கிணற்றங்கரை அருகே மஞ்சள்நீர் தெளித்து சுத்தப்படுத்திக் கோலமிட்டு சாம்பலை நான்கு திசைகளிலும் எறிந்து, வறட்டி யைக் கிரமமாக அடுக்கி, கற்பூரத்தை அவைகளின் மேலிட்டுந் தூபதீப நைவேத்தியத்திற்கு வேண்டிய சாமான்களுடன் ஒரு கொத்து வேப்பிலையும், நீர்

மோரும், பானகமும், இளநீரும் வைத்துப் படைத்து கருமாரி அம்மனைத் தியானம் செய்து, கற்பூர ஆரத்தி செய்து 'தீ' மூட்ட வேண்டும். இப்படி எறித்த சாம்பலைச் சரிவரச் சல்லடையில் சலித்து ஸ்ரீதேவியின் சாம்பலுடன் சேர்த்து அரவணைக்கலாம். இதனல் யாதொன்றும் தோஷம் நேராது. எல்லா காரியங்களும் அனுகூலமாகும். அப்படி ஏதாவது அவள் வாக்கு கேட்கப் பிரியப்பட்டால் நேரில் வர இயலாமற் போயினும் அப்போது சாம்பலை நான்கு திசையிலும் தூவி விட்டுப் படுத்துக்கொண்டாள் ஸ்ரீ தேவியின் அருள் கனவிலோ, அல்லது சகுனங்கள் மூலமாகவோ உத்திரவு கிடைக்கும். அதைக் கடைப்பிடித்தால் நமக்கு ஆபத்து மலையளவு இருந்தாலும் கடுகளவாகிப் பனிபோல் நீங்கிவிடும். அவரவர் உள்ளத்துக்கு ஏற்றவாறு அம்பிகையின் அருட்பிரசாதம் கிடைக்கும்.

## 2. மஞ்சள் அரவணைக்கும் முறை

இந்தப் படலம் அநேகமாகப் பெண்களுக்கு உரியது. ஏழு மஞ்சள் கொண்டு அரவணைக்க வேண்டுமென்று அருளப்பட்டது. ஏனென்றல் பெண்களுக்கு நேரும் எத்தகைய விபாதியையும் தீர்க்கக்கூடிய சக்தி மஞ்சள் அரவணைப்புக்கு உண்டு பெண்கள் மக்கட் பேறு இன்றி வருந்துதல், நாளுக்கு நாள் உருக்குலைதல், மயக்கம், மனம் சோருதல், இடுப்படி பினனல், கை கால் குடைச்சல், வயிற்று வலி முதலிய நோய்களிலிருந்து குணமடைவதற்கு மஞ்சள் அரவணைப்பு அவசியம் விட்டு விலக்கம் ஏற்பட இரண்டு நாள் மூன்று நாள் தாமதமானல்,

அவர்களின் கனவுகளில் யாரோ வருவது போலவும், அன்புக்குரிய பாத்திரமானவர்கள் சரசங்கள் ஆடு வது போலவும், ஒரு பெண் வருவது போலவும், குழந்தை தருவது போலவும் கண்டால் மறுநாள் விடியும் போது வீட்டு விலக்கம் ஏற்படும். பலவித மான வியாதி திரேகத்தில் ஏற்படவும் நேரிடும். ஒற்றைத் தலைவலி, தலையிடி, வயிற்றுவலி போன்ற வைகள் வந்து பெருந் தொந்தரவு கொடுக்கும். மந்திரம், தந்திரம் என்று பணம் விரயம் செய்தாலும் பலன் ஏற்படுவதில்லை ஸ்ரீ தேவி இவை போன்ற தொந்தரவுகள் முனி, காட்டேரியால் ஏற்படுகின்றன என்று வாக்கிடுகிருள். அவர்களுக்கு முதலில் சாம் பலை அருளி அதை அரவணைக்கச் சொல்கிருள். ஒரு வாரத்தில் குணமடைந்தால் ஏழு மஞ்சள் கொண்டு வரும்படியும் வாக்கிடுகிருள். அந்த ஏழு மஞ்சள் நீளமாயும், முனைகள் உடையாமலும், சுத்தமாயும், கோணல் இல்லாமலும் இருக்க வேண்டும். அதற்கு முமுக்கு மஞ்சள் என்று பெயர். காலமும் வேளையும் தவருமல் சரிவர அரவணைத்து மூன்று, ஐந்து அல்லது ஏழு வாரங்கள் பரிசுத்தமாய்ச் செய்து வந்தால அம்மன் அவர்களை பரிபூரணமாக ஏற்று காப்பாற்று வதாக வாக்கிடுகிருள்.

மஞ்சள் குளிக்கும் முறையை கீழ்க் கண்டவாறு அனுஷ்டானம் செய்யவேண்டும். மஞ்சள் இழைத் துப் பூசுவதற்காக ஒரு புதிய செங்கல் ஒன்று சுத்தப் படுத்தி வைத்துக்கொள்ள வேண்டும். மஞ்சள் அர வணைக்கும் நாள் முதல் ஆண்களிடம் பேசக்கூடாது. வெளியே சென்று வரும் பெண்களிடமும் தீட்டடி

யான பாலகர்களிடமும் பேசக்கூடாது. பல இடங்க ளிலும் திரியக் கூடாது. பரிசுத்தமாகவும், படுக்கடி யில்லாமலும், எச்சல் துப்பல் எடுக்காமலும், துடப் பம் முறம் எடுக்காமலும், கையால் ஒரு வஸ்துவைக் கிள்ளாமலும் இருக்க வேண்டும். பாய் தலையணை மெத்தைமேல் சயனம் செய்யக்கூடாது. தனக் கென்று ஒரு புதிய கம்பளமோ, துண்டோ வைத்துக் கொண்டு படுக்கை போட்டு, மஞ்சள்தேர் உறைக் கும் செங்கல்லையே தலைக்குத் தலையணையாக வைத்து நித்திரை செய்ய வேண்டும். காலையில் சாம்பர் தீர்த் தம் அரவணைத்த பிறகு வீட்டு வேலையெல்லாம் கவ னித்துவிட்டு தனக்கென்று தனியாகச் சமையல் செய்துவிட்டு, பகல் 12 மணிக்கு மஞ்சள் அரவ ணைத்து விட்டு, அது முதற்கொண்டு துடைப்பம், முறம் எச்சில் எடுத்தல் பகல் தூங்குதல், யாதொரு பொருளையும் கையால் கிள்ளுதல் முதலியவைகளை முற்றும் விலக்கவேண்டும். அந்தியில் சாம்பர் தீர்த் தம் சாப்பிடவேண்டும். இரவு படுக்கும் போது கனி அருந்த வேண்டும். பள்ளிக்கோ, ஜீவனத்திற்கோ போகும் பெண்களுக்கு மஞ்சள் அரவணைக்க ஏற் பட்டால் உதயத்தில் 6 மணிக்கோ, அந்தி 6 மணிக்கோ மஞ்சள் உறைத்துக் குளிக்கலாம்.

## குளிக்கும் முறை

சரியாகக் காலை 11 மணிக்கு குளிர்ந்த தண்ணீர் ஓர் குடத்தில் பிடித்து, ஒரு மணிநேரம் வரைக்கும் சூரியன ஒளி பரவுமிடத்தில் வைக்க வேண்டும். சரி யாக மணி 12க்கு குளிக்குமிடத்தில் ஒரு மஞ்சள் தேரும், மஞ்சள் தேர் இழைக்கும் கல்லையும், மடியில்

கட்டிக்கொண்டு, ஒரு மஞ்சள் கொஞ்சம் சாம்பர், சேலை, கொஞ்சம் நலங்குபொடி முதலியவற்றை எடுத்துக்கொண்டு குளிக்கும் அறைக்குள் செல்லவேண்டும் குளித்து முடிக்கும் வரை ஒருவரையும் அழைக்கக் கூடாது. குளித்த பிறகு சாம்பர் தீர்த்தமும், அன்னம் புசிக்கும் வரை ஒருவரிடமும் பேசக்கூடாது. மூன்று குடம் ஜலம் கொட்டிக்கொண்டு கிழக்கு முகமாய் அமர்ந்து மஞ்சள் உறைக்கும் திருக் கல்லை கிழக்கு மேற்காக நிலத்தில் அமர்த்தி, மஞ்சள் எடுத்து அம்மனைத் தியானம் செய்து இழைக்கவேண்டும். அப்போது தம்முடைய குறைகளைப் போக்க "தாயே! என் வினையைத் தீர்ப்பதுடன் என் குடும்பம் மேலோங்கித் தழைக்கவும் அருள வேண்டும்" என்று கோர வேண்டும். மஞ்சளை நன்ருய் உறைத்து அதை முகம் முதல் முட்டியளவு வரைக்கும் பரிபூரணமாய் பூசி அத்திருக்கல்லை அலம்பி மூன்று தரம மஞ்சள் பரிபூரணமாக தீர்த்தம் அருந்தி, தியானம செய்து ஜலம் கொட்டிக் கொள்ளவேண்டும். உடம்பில் அல்லது, தலையில் ஏதாவது எண்ணெய்ப்பசை இருந்தால் நலங்கு பொடி போட்டுச் சுத்தப் படுததிக்கொண்டு, அணிந்திருந்த ஆடையைத் துவைதது எடுததுக்கொண்டு, நீராடி, ஆடை அணிந்து கொணடு திருககலலையும் மஞ்சள் தேரை யும், மடியில் வைத்துச் சுட்டிக்கொண்டு முகத்தில் சாம்பர் பூசி, பஞ்ச பாத்திரத்தில் தீர்த்தம ஏந்தி, தனித்து இருக்குமிடம் வந்து தேவியைத தியானம் செய்து, தீர்த்தம் அருந்தி திருக்கல்லையும், மஞ்சள் உறை தேரையம் பத்திரப்படுத்தி வைத்து அனனம்

புசிக்கவேண்டும். சிறிய குழந்தைகளாயிருந்தால், அவர்களுக்காகப் பெரியோர்கள் தீட்டு திடுக்கில்லாமல் சுத்தமாயிருந்து செய்யவேண்டும். அம்மன் வாக்குப்படி சிலர் மூன்று வேளை மஞ்சள் உறைத்து குளிக்க வேண்டும். சிலர் காலையிலும் மாலையிலும் குளிக்க வேண்டும்.

சேவார்த்திகள் எவ்வளவு சிரத்தையுடன் மஞ்சள் தேர் உறை செய்கிறார்களோ அவ்வளவு சிக்கிரத்தில் உடம்பிலிருக்கும் பிணி நீங்குவதுடன் ஏதாவது முனி காட்டேரி சூர்மைகள் இருந்தாலும் அவைகள் அகல வாக்கிடுவாள். தன்னுடைய இடம், பிறப்பு இறப்புகளையும் எடுத்துரைக்கும். அந்த துஷ்ட தேவதைகளுக்குரியபடி அவைகளின் வாக்கு வாங்கிப் பரிகாரம் செய்யும்படியும் வாக்கிடுவாள்.

நம் தேவி எல்லாவற்றையும் எடுத்துரைத்து சாம்பலைக் கொடுத்து நடக்கும் முறையையும் சொல்லி விடுகிறாள். அதனால் நாம் கிரமமாக வேளையும் நாழியும் தவறாமல், உண்மை உறுதியுடன் பிரார்த்தனை செய்து அரவணைத்தால் தேவியின் திருவாக்கு தப்பாமல் அருள் கிடைக்கும் இது தேவியின் வாக்காகும். தொழிலுக்குப் போகும் பெண்களுக்கு காலை 6 மணிக்குள் மஞ்சள் குளிக்கலாம். மாலை வீடு திரும்பியவுடன் கைகால் சுத்தம் செய்துகொண்டு ஆடை மாற்றிக் கொண்டு மஞ்சள் நீர் தெளித்துக்கொண்டு காமாக்ஷி தீப தரிசனம் செய்து மஞ்சள் நீர் சாம்பல் இட்டு அரவணைக்கலாம்.

மார்புவலி, காசம், சயம், இருமல், பக்கசூலை வியாதி, இரதக்கொதிப்பு, நீரில் உப்பு, சர்க்கரை

முதலியவை இருக்கும். சேவார்த்திகள் காலை மாலை மஞ்சள் இலைழுத்து குளிர்ந்த நீரில் அருந்திவந்தால் வியாதி போகும். திரேகம் நலம் பெறும். மூலம் பௌத்திர வியாதிகளுக்குச் சம்பார் பிரசாதம் மஞ்சள் நீருடன் அருந்துவதுடன் காலையில் ஒரு கனியோ அல்லது ஆவின் வெண்ணெயில் சாம்பார் பிரசாதம் சேர்த்து அரவணைத்தால் பிணி போகும்.

## 3. திருக்கனி அரவணைக்கும் முறை

ஸ்ரீ தேவி கருமாரி அம்மன் திருக்கனி ஓதி வழங்குகின்றாள். அதற்கு வாரக்கனி என்று பெயர் அதற்கு வேண்டிய ஏழு எலுமிச்சம் பழங்களும் புள்ளிகள் இல்லாமல் சுத்தமாய் மஞ்சள் நிறமாயிருக்க வேண்டும். சாதாரணமாக மன வ்யாதியாலும், கரும வினையாலும், மந்திர தந்திரங்களால் வாடி வதங்குபவர்களுக்கும், முனி காட்டேரி சுடர் இருப்பவர்களுக்கும, எழுந்திருக்க முடியாத வியாதியஸதர்களுக்கும் கனி கொண்டு வரும்படி வாக்கிடுவாள்.

(1) பிரதிவாரமும் ஸ்ரீ தேவி ஆலயம் வரும் சேவார்த்திகள் ஒரு கனி கொண்டு வந்து தாயிடம் கொடுத்து, அல்லது அம்மன் சந்நிதானத்தில் வைத்து சாம்பலுடன் பெற்று அதை உடனே இருதுண்டாக்கி அரவணைப்பவர்களுக்கும் உண்டு. சிலர் அக்கனியைப் பத்திரப்படுத்தி தாங்கள் கோரிய காரியங்கள் பூர்த்தி அடைவதற்காகத் தீட்டுத் திடுக்கில்லாமல் வைத்துப் பாதுகாப்பதும் உண்டு. அவர்கள் எங்கு சென்றாலும் சாம்பலையும், இக்கனியையும் எடுத்துச் சென்றால் அவர்களுக்குக் காரியங்கள் சாதகமாக அமையும்.

வியாபாரத்தைக் கோரியோ, மாடு பிடிக்கவோ பெண் பார்க்கவோ, பிள்ளை பார்க்கவோ வேறு நாம் முன்னேற்றப் அடைவதற்கான நற்காரியங்கள் எதுவானாலும் நாம் புறப்படும்போது தூபதீப நைவேத்தியம் செய்து, சாம்பலை நம்பி எடுத்துக்கொண்டு வெளியே வரும்போது மூன்று சுமங்களிகளோ கோ தரிசனமோ, கிடைத்தால் பூர்த்தியாகும் என்று அர்த்தம். ஒரு காரியத்தைச் செய்யும்போது பொருள் விரயம் ஆகும்' என்று ஸ்ரீ தேவியே அதற்குத் தடைகளை ஏற்படுத்தி நாளடைவில் காரியத்தைப் பொருள் விரயமில்லாமல் பூர்த்தி செய்வதாகவும் சிலருக்கு வாக்கு கொடுக்கிருள்.

ஓமல் இருந்தால் கடைகளில் கட்டுவார்கள். சிலர் விடுகளில் ஏதாவது கிரகதோஷமிருந்தால் மஞ்சள் துணியில் சாம்பலையும் கனியையும் வைத்துத் தூபமிட்டு நடைபாதைகளில் கட்டுவார்கள்.

(2) நேத்திரம் இழந்தவர்களுக்குப் பலனிருந்தால் எடுத்துரைத்து ஏழு கனி தருகிருள். அவர்களைக் காலை 6 மணிக்கு ஒரு எல்லைக்காளி சந்நிதானத்திற்குள் கூட்டிச் சென்று பலி பீடத்திற்கு அருகாமையில் நிற்க வைத்துப் பஞ்ச கலசத்தில் திர்த்தும் கொண்டு வந்து, சாம்பலிட்டு, பலி பீடத்திற்கு அருகாமையில் கண்களை அலம்பி கனியை இரண்டு துண்டாக்கி ஒரு துண்டை எடுத்து ஒரு கண்ணில் மூன்று துளி, மற்றொரு கண்ணில் மூன்று துளிவிட்டு அந்தத் துண்டைச் சாப்பிடச் செப்ய வேண்டும். பிறகு கண்ணைக் கீழே தாழ்த்தித் திர்த்தம் கொண்டு வந்து சாம்பலிட்டு அலம்பி சாம்பர் இறக்கி, நான்கு திசை

எறிந்து, சாம்பர் அணிந்து தாயைக் கோரி சூரிய நமஸ்காரம் செய்யவேண்டும் சாம்பர் அரவணைக்கும் முறையைப்போல் ஒவ்வொரு நாளும் அரவணைக்க வேண்டும். மாலை 6 மணிக்கு எல்லைக் காளி கோயிலுக்கு மீண்டும் அழைத்துக்கொண்டு வந்து சனியின் மற்ெருரு தண்டைக கொண்டு காலையில் செய்தவாறே அரவணைக்க வேண்டும். அவ்வாறே செய்தால் தாய் அருளால் சீக்கிரமாகக் கண் பெறலாம். பரிசுத்தமாகவும், பாய் பஞ்சணை மேல் படுக்காமலும் திட்டு திடுக்கில்லாமலும், உண்மை உறுதியுடன், அவள் பாரம் என்று நம்பி இருக்கும் மக்களை அவள் தன் மடியேந்திக் காக்கின்றாள்'

(3) வியாதியஸ்தர்களுக்கும், முனி காட்டேரி சுடர் முதலியவைகள் உற்றவர்களுக்கும் அம்மன் ஏழு கனி தருகிறாள். அதை வேலை தவறாமல், எச்சல் துப்பல் இல்லாமல், அன்னிய பதார்த்தங்களை உபயோகிக்காமல் உண்மை உறுதியோடு இரவு சயனிக்கப்போகும் முன்பு பஞ்சபாத்திரத்தில் தீர்த்தமும், ஒரு கனியும், சாம்பலும் ஒரு சிறு கத்தியும் எடுத்து வைத்துக்கொண்டு, சாம்பலை நான்கு பக்கம் ஊதி, கிழக்கு முகமாக அமர்ந்து, தேவியைத் தியானம் செய்து நம் இன்னல்களைப் போக்கும் படி கோரி, அக்கனியைக் கத்தியினால் இரு துண்டாக்கி ஒரு துண்டில் சாம்பலிட்டு, அப்படியே சாப்பிடவேண்டும். சிலர் சாறு எடுத்து சாப்பிட்டு, அத்தோல்களை ஒரு கங்கைத துறையிலோ, பூந்தொட்டியிலோ எறிந்து விடுவார்கள். கொஞ்சம் தீர்த்தம் அருந்தி, சாம்பர் உடல் பூராவும் தடவிக்கொள்ள வேண்டும்,

தலையணை இல்லாமல் மணைக்கட்டையை வைத்து படுக்கவும். மறுபடியும் எப்போது தூக்கம் கலைகிறதோ அப்போது மற்றொரு உண்டையும் முதல் துண்டைச் சாப்பிட்டது போலவே சாப்பிடவேண்டும். தூக்கம் கலைவதற்குமுன் பொழுது விடிந்து விட்டாலும் ஒளியைச் சாப்பிட்டு விட்டுத் தான மற்ற காலைக் கடனைகளைத் துவக்கவேண்டும். அவ்வாறே உண்மையுடன் செய்து வந்தால் வயனை தீரும். சுகமடையலாம்.

(4) புத்தி சுவாதீனமில்லாதவர்களுக்கும் வைப்பு வைத்தவர்களுக்கும் அமமன் 'ஏழு கனி' அருளுவது வழக்கம் காலையில் 6 மணிகளுக்குள்ளாக ஒரு கிணற்றுக் கரையிலோ, அல்லது வாசலிலோ வரிசையாக 9 குடம் நீர் வைதது அதில் சாம்பர் போட்டு, பாலகனை (வியாதியஸ்தரை) கிழக்கு முகமாக அமர வைத்து, சாம்பர் இறக்கி நாலு திசையில் எறிந்து ஒரு ஒளியை இரு துணடாக்கி ஒன்றை நனருக உச்சியில் தேய்தது, பிறகு 9 குடம் சாம்பர் தண்ணீரை மூச்சுத் திணற, ஒன்றின் பின் ஒன்ருகக் கொட்ட வேண்டும். உடமன துடைத்து சாம்பர இறக்கி, சாம்பர தீர்த்தம் தர வேண்டும் மற்றொரு துண்டையும் பத்திரமாக வைத்துக்கொள்ள வேண்டும் மறுபடி பகல் 12 மணிக்கு 7 குடம் சாம்பர் தண்ணீர் பிடித்து வைத்துச் சாம்பலிட்டு, பாலகனை உட்காரவைத்துச் சாம்பர் அரவணைத்து மற்றொரு துண்டை உச்சியில் நனருகத் தேய்த்து மூச்சுத் திணறும் படியாக தணணீர் கொட்டவேணடும். சாம்பர் தீர்த்தம் கொடுககவேண்டும். பகலில் படுத்து உறங்

கக் கூடாது. மாலையில் 5 குடம் சாம்பர் தண்ணீர் பிடித்து வைத்து சாம்பலிட்டு, பாலகனை உட்கார வைத்து, நான்கு திசையிலும் சாம்பர் ஊதி, சாம்பர் இறக்கி, முன்போலவே மூச்சுத் திணறும்படியாக தண்ணீர் கொட்டி, நன்றாக துடைத்து, சாம்பர் தீர்த்தம் கொடுக்க வேண்டும். திட்டு திடுக்கு இல்லாதவர்களாய் ஒருவரே அருகாமையிலிருந்து, உண்மை உறுதியும் கொண்டு செய்பவர்களாய் இருக்கவேண்டும். நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமாகத் தேவி வாக்கிட்டவாறு படிப்படியே நோய் தீர்ந்து குணமடைவான் பாலகன். அம்மன் 14 கனி கொடுத்தால் ஒரு கனியைக் காலையிலும் உச்சியினும் அறத்து சிரசின் உச்சியில் தேய்க்க வேண்டும் மற்றொரு கனியை அறுத்து நான்கு திசையில் எறிய வேண்டும்.

இன்னும், சிலருக்கு 21 கனி தருவது உண்டு. மூன்று வேளையும் இரு துண்டுகளைத் தேய்த்து அரவணைக்கும்படி திரு வாக்கிட்டருளுவாள். அந்தந்த நோயின் திவிரத்துக்குத் தக்கவாறு எடுத்துரைப்பாள் அவ்வாறே உண்மை உறுதியுடன் கடைப்பிடித்தால் வியாதி நீங்கிக் குணம் பெறலாம்.

(5) குழந்தைகளுக்கு ஏற்படும் பாலகிரஹ தோஷத்திற்கும். சீதபேதிக்கும் இரத்த பேதிகளும், பலஹீனம அடைந்து, கனி சாப்பிட முடியாதவர்களுக்கும் தேவி ஏழு கனி தருவதுண்டு. அதைக் கீழ்க் கண்டவாறு அரவணைக்கும்படி அம்மன் வாக்கிடுவது வழக்கம் :-

ஒரு புதிய சிறிய அகன்ற மண்பாண்டம் மேல் மூடியுடன் வாங்கவேண்டும். ஈசான மூலையில் இடத்தைச் சுத்தப்படுத்தி மூன்று கல் அடுப்பு வைக்க வேண்டும். காலை 6 மணிக்குத் தீமூட்டி அப்பாண் டத்தை அடுப்பில் வைத்து, சிறிதளவு பஞ்சபாத்திரத் தில் ஜலம் கொண்டு வந்து கீழே வைக்காதபடி தீர்த் தத்தை அதில் விடவேண்டும். அது பொங்கிய உடன் எடுத்து கீழே கொட்டி விட்டு, ஒரு எலுமிச்சம பழத்தை அறுத்து இரசத்தை அதில் பிழிய வேண்டும் பொங்கி வரும் சமயத்தில் சற்று ஜலமிட்டு கீழே இறக்கி வைக்க வேண்டும். ஆறியவுடன் சாம்ப லிட்டு, நன்ருய் குழைத்து உதயத்திலும், அந்திய லும் நாக்கில் தடவ வேண்டும். இதைச் செய்து கொடுப்பவர்கள் எச்சல் துப்பல், திட்டு திடுக்கில்லா தவர்களாய் செய்து கொடுக்க வேண்டும். காலம் தவறக் கூடாது. தினமும் செய்யவேண்டும். மூன்று வேளையிலேயே அவ்வினை அகலும். எல்லாம் அவள் செயல்.

(6) சொரி சிரங்கு, பெருவியாதி முதலியவை களுக்கு ஏழு கனியும் சுமார் 200 கிராம நல்லெண் ணெயும் கொண்டுவரும்படி அம்மன் உத்திரவிடுவாள் அதைக்கொண்டு வந்து கொடுத்து, தேவியின திருக் கரத்திலிருந்து பெற்றுச் சாம்பர் அரவணைத்தால் கொஞ்சம் சுமாராகும. உடனே கனி ஓதிக்கொடுத்து அந்த எண்ணெயில் கொஞ்சம் மணிவிளக்கில் விடும படியும், அக்கனி ஏழையும், அந்த எண்ணெயில் அறுத்து பிழிந்துகொண்டு வரும்படியும் உத்திரவு இடுவாள். அவ்வாறு செய்து. சிறிதளவு பூங்கற்பூரம்

அதில் போட்டு தேவியின் திருச் சாம்பலை, அகில் அருளுகிருள். அதைக் கீழ்க்கண்டவாறு, அரவணைக் கும்படி உத்திரவு இடுகிருள்.

காலையில் 6 மணிக்கு எழுந்து பரிபூரணமாய் உடம்பெல்லாம், கடவிக்கொள்ள வேண்டும. சாம்பர் இறக்கவேண்டும். நான்கு திசைகளிலும் சாம்பர்எறிய வேண்டும். தனி இடத்தில் அமர்ந்திருக்க வேண்டும். பகல் 11 மணிககு ஒரு குடத்தில் ஜலம் பிடித்து இரண்டு மூன்று இதழ் வேப்பிலையும் சாம்பலும் போட்டு சூரியபுடத்தில் வைக்க வேண்டும். சரி உச்சி நேரததில் பாலகரை உட்காரவைத்து, மேலே குறிப்பிட்ட ஜலத்தில் நீராட வைக்க வேண்டும். நன்ருய்த் துடைத்துச் சாம்பர் திர்த்தம் கொடுத்து, சாம்பர் இறக்கி நான்கு திசையில் சாம்பர் ஊதவேண் டும். மற்றவை முதல் படலத்தில் இருக்கிறபடி நடக்க வேண்டும்.

(7) சிலருக்கு ஏழு கனி கொடுத்து அந்தியிலோ அல்லது படுக்கைககுச் செல்லும்போதோ அறுத்து நான்கு திசையிலும போடும்படி சொல்லுவாள். அப்போது தினமும ஒரு கனி எடுதது இரவில் படுக் கையில் அமர்ந்து கிழக்கு முகமாய்த் திருமபி, அல்லது அந்தியில் வாசலில் மேறகு முகமாய் நின்று, ஒரு கனி எடுத்து உச்சியிலிருந்து இறக்க வேண்டும. முத லில் உச்சியில் வைததுப் பிறகு, உடம்பில கீலுக்குக் கீல் வைததுக்கொண்டே இறக்கிக் கொண்டுபோய் நான்குதுண்டாக்கி நான்குதிசையில் எறியவேண்டும அதன் பிறகு சாமபர் இறக்கி, சாமபர் நான்கு திசை யிலும் எறிந்து, சாம்பா திர்த்தம் அருந்தவேண்டும்.

இரவில் அரவணைப்பதாயிருந்தால் இதன்படி செய்து நித்திரைக்குச் செல்லவேண்டும். காலையில் எழுந்த உடன் கனிகளைப் பொறுக்கி எடுத்து நடுவீதியில் எறியச் சொல்லவேண்டும் தினமும் ஒவ்வொரு திசையாய்ப் படுக்கையை மாற்றிப் போட்டு படுக்க வேண்டும்.

## 4. பத்து அரவணைக்கும் முறை

ஸ்ரீ தேவி கரிமாரி அம்மன் சில சேவார்த்திகளுக்கு அதாவது, கைகால் சரிவராதவர்களுக்கும மெலிந்தவர்களுக்கும், பக்கசூலை நோய் உள்ளவர்களுக்கும், திராத வயிற்றுவலி, குன்மக் கட்டி, இராஜ கட்டி முதலியன உள்ளவர்களுக்கும் ஏழுகனி, ஏழு மஞ்சள் தேர், கத்தி படாத வேப்பிலை ஆகியவற்றைக் கொண்டு அரவணைக்கும்படி வாக்கிடுகிறுன். சாம்பர் அரவணைக்கும்முறைபோல் பதது அரவணைக்க வேண்டும்.

காலையில் 5-30 மணிக்கு திட்டு திடுக்கில்லாதவர்கள் ஒரு கனி, மஞ்சள தோ, வேப்பிலை, பஞ்சபாத்திரத்தில் ஜலத்தையும் இவைகளை அம்மிக் கல்லின் மீது வைத்து மஞ்சளையும், வேப்பிலையையும் அரைகது ஒரு கனி துண்டின் ரசத்தை அதில் பிழிந்து சேர்க்க வேண்டும. பிறகு சிறிய தட்டில் ஒன்று சேர்த்து வைத்து, நடுவில் பள்ளம செய்து சாம்பலிட்டு, கற்பூரம் வைத்து திபாராதனை செய்து, வியாதிஸ்தரைக் கிழக்குமுகமாக அமர்த்தி ஸ்ரீதேவியின் நாமத்தினைத் தியானிக்கும்படி சொல்லவேண்டும். அரைத்த பத்தியை எடுத்துக் கொணடு உச்சியில் கொஞ்சம தடவி

கீலுக்குக் கீல் தடவி இறக்கி, எங்கு வியாதி அதிகமாயிருக்கிறதோ அங்கு அதிகமாய்த் தடவ வேண்டும். மற்றொரு துண்டுக் கனியை சாப்பிடச் சொல்ல வேண்டும். சாம்பர் இறக்கி தீர்த்தம் கொடுக்க வேண்டும். திட்டு திடுக்கில்லாத இடத்தில் இருக்க வேண்டும். பகல் 11 மணிக்கு ஒரு குடம் ஜலத்தில் சாம்பர் பத்திரியிட்டு, சூரிய புடம்வைத்துச் சரியான உச்சி நேரத்தில் நீராட வைக்கவேண்டும். உடம்பிற்கு நலங்கு பொடி போட்டுத் தேய்த்துக் கொள்ள வேண்டும். சாமபர் தீர்த்தம் அருந்த வேண்டும். இவ்வாறே தினமும் செய்து உண்மை உறுதியுடன் கோரி நின்றால் அன்னை அருள் பாலித்துப் பிணியைத் தீர்ப்பாள்.

கட்டி முதலியவைகள் வாய் பிளந்தால், இந்த அரைத்த பத்தை இடுவதற்கு முன்பாக சாம்பலும் தூளும், அதன் வாயிலிட்டு அதறகுமேல பதது வைதது கட்ட வேண்டும. தினமும அலம்ப வேண்டிய அவசியமில்லை. பததுமேல பததும் சாமபர் கற்பூரமும வைத்துக் கட்டிக் கொண்டே வநதால் சீக்கிரததில் குணமடைநது விடும. ஜாக்கிரதையாய் அரவணைக்க வேண்டும்.

இந்தப் பத்தை சிறிய மாத்திரைகளாய் செய்து உலாததி தீட்டுப படாத இடததல் வைததுக கொண்டு குழநதைகளுக்கும், பெரியோர்களுக்கும் உடம்பில சுரம், ஆயாசம், அஜீர்ணம் ஏற்பட்டால், குழநதைகளுககு ஒரு மாததரையும், பெரியவர்களுக்கு இரண்டு முதல மூனறும் தந்தால் அவ்வியாதி நீங்கும். அநதியிலும் உச்சிக காலத்திலும் தீட்டு

திடுக்கில்லாமல் சாப்பிடச் சொல்ல வேண்டும் க்ஷய ரோகமுள்ளவர்களும் மார்வலி, மூச்சடைப்பு, மூச்சுத் திணறல், காசம் இருமல், உடம்பில் சர்க்கரை, உப்பு அதிகமாகவுள்ளவர்களுக்கும் இதை தினமும் சாப் பிட்டால் உடம்பு நாளுக்கு நாள சீர்பெற்று நிற்கும் கர்பவதிகள் தீர்த்தத்தில் சாம்பலிட்டு சாப்பிட்டால, அவர்களுக்கு பிரசவகாலங்களில் சிக்கலில்லாமல் ஆரோக்கியமாயிருக்கும். பிரசவ காலங்களில் புதிய மண்பாண்டம் ஒன்றில் கிணற்று ஜலம் கொண்டு வந்து, மஞ்சள் தேர் அரைத்து, அதில் போட்டு சாம் பலும் அதில் சேர்த்து ஒரு கொத்து வேப்பிலையையும் அதிலிட்டு, அன்னையை பிரார்த்தனை செய்து கொண்டு சிறிதளவு கற்பூரம் ஏற்றி சூரிய நமஸ்காரம் செய்து அந்த மஞ்சள நீரை மும்முறை மூச்சு திணற முகத்தில் அறைந்து நன்ருக துடைத்து உள்ளுக்கு போதுமளவு அருநதும்படி சொல்ல வேண்டும். மூன்று முக்கால் நாழிகைக்குள்ளாக யாதொரு இன்னலுமிலலாமல தாய் வேறு குழந்தைவேருக சுகப் பிரசவமாகவிடும். பிறகு சாம்பர் அரவணைக்கும் முறைப் பிரகாரம் செய்யவேண்டும். வீட்டுக்கு அழைத்துக் கொள்வதாயிருந்தால சிறு பத்துட்டு, நீராட வைத்து சாம்பர் இறக்கி ஸ்ரீ தேவியின் பாதத திணை நம்பிச் செய்தால யாதொரு இடைஞ்சலும் தாய்க்கும் குழநதைக்கும் வராது. இபபத்தை அரைத்து வைதது அம்மை போட்டுள்ளவர்களுககு ஒரு குடத்தில் ஜலங்கொண்டு ஒரு வேம்புக்கொததுப் போட்டு மூன்று வேளையும், மெதுவாக பயபக்தியுடன ஸ்ரீ தேவியைக் கோரி, தெளிகக வேண்டும் சாம்பர் தீர்த்தம் கொடுக்கவேண்டும். வாந்திபேதி கண்ட

வர்களுக்கு ஜலம் விட்டுப் பத்தை கரைத்து சாம்ப விட்டு குடிக்கும் அளவு ஸ்ரீதேவியின் நாமத்தைக் கோரிக் கொடுத்தால் நின்றுவிடும். அதற்குப பிறகு சாம்பர் தீர்த்தம் அரவணைகக வேண்டும்.

வெளியூர்களில் உள்ளவர்களுக்கு அம்மன் வாக்கு கேட்டு அவர்கள் ஊரை யடைந்துவிட்டாலும் கனி மஞ்சள் பத்திரி இவைகளை அரவணைக்க ஆர்வமிருந் தால் ஸ்ரீதேவியின் ஆலயங் கடந்து பெற்றுவர முடிய விலலையே யென்று வருந்தாமல் சுக்கிரவாரமோ, ஆதி வாரமோ, சரியுச்சிகளோ, அந்திக்கோ, வாச லில் மஞ்சள் நீர் தெளித்து, விளக்கு ஏற்றி வைத்து, தூபதீப நைவேத்தியத்துடன் மஞ்சள் கனி, பத்திரி வைத்து எவ்வாறு அவர்களுககு திருவாக்கு உரைத் தாளோ, அவ்வாறே அரவணைககவும். மூன்று வாரங் களுக்கு ஒரு முறையோ, ஐந்து வாரங்களுககு ஒரு முறையோ ஒரு வேம்பு மரத்தடியில் ஒரு கனி, மஞ்சள், சாம்பர் வைத்து தூபதீப நைவேத்தியம் செய்து பிரசாதத்தையும மஞ்சள கனியையும பயன் படுத்திக் கொள்ளலாம.

## திருச்சாம்பர் அரவணைக்கும் பொதுமுறை

ஒவ்வொரு சேவார்த்திகளும் தினமும் சாம்பர் தீர்த்தம் அருந்தி, முகத்தில அணிந்துகொள்ள வேண்டும். ஒவ்வொருவரும் சாம்பர் எடுககும் முன் பாக காலையில நீராடினபின், தமது கரத்தில் எடுக்க வேண்டும. வெளியே சென்று வந்தால், மற்றக் காலங்களில், கை, கால், முகம் சுத்தப்படுத்தி, மஞ் சள நீர் தெளித்துக் கொணடுதான் சாம்பலை எடுத்து

உபயோகம் செய்ய வேண்டும். இரவில் படுக்கைக்குச் செல்லும்போது, குடும்பத்திலிருப்பவர்கள் எல்லோரும் சாம்பலை நான்கு திசையில் எறிந்து படுத்துக் கொள்ள வேண்டும். சுக்கிரவாரங்களிலும், ஆதிவாரங்களிலும், பரிசுத்தமாக இருந்து, உதயத்திலோ, உச்சிநேரத்திலோ, அந்தியிலோ, தேவியைக் கோரிச் சிறிது தூபமிட்டு நிற்க வேண்டியது கடமை.

ஜீவனத்திற்குச் செல்லும்போது ஒவ்வொருவரும் சிறிதளவு சாம்பர் எடுத்துக்கொண்டு போகவேண்டும் நமக்கு ஏதாவது இடைஞ்சல் வந்தாலும், பொறுமையுடன் ஏற்றுக் கொள்ளவேண்டும். உடனே, அன்னை பாதத்தினைத் தொழுது வணங்கி சாம்பர் ஊதி, அரவணைத்துக் கொள்ள வேண்டும். ஒவ்வொரு காரியங்களில் இறங்கும்போதும் ஸ்ரீ தேவியின் நாமத்தினை கோரி ஒரே நினைவாக உறுதி செய்ய வேண்டும். நாள் ஒரு மேனியும் பொழுதொரு வண்ணமாகப் பூர்த்தி ஆகும். அதனால் வரும ஆபத்துக்கள் எல்லாம் மலைபோல் இருந்தாலும், சாமபல உறுதியாய நம்பினவர்களுக்கு பனிபோல் நீங்கிவிடும். இவ்வாறு பொதுப்படையான முறைகளை ஒவ்வொரு சேவார்த்திகளும் செய்துவந்தால குடும்பத்தில் எவ்வித குறைவும் இல்லாமல் சுகமாக வாழலாம்.

ஸ்ரீ தேவி வாக்கிட்டவாறு அரவணைத்துக் கொண்டு வரும் சமயத்தில், தீர்நத பிணி அதிகரிப்பதால் ஏதோ திட்டியுள்ள பாலகர்கள் நெருங்கினமையால் வந்தது என்று தெரிந்து கொள்ள வேண்டும். உடனே பொதுவாகச் செய்ய வேண்டியது என்னவென்றால், ஒரு பாண்டத்தில ஜலம் கொண்டுவந்து

மஞ்சள் அரைத்துக் கலந்து, சாம்பலிட்டு முகத்தில் மும்முறை அடிக்க வேண்டும். பிறகு உள்ளுக்குக் கொடுத்து, வீடு பூராவும் மஞ்சள் நீர் தெளிக்க வேண்டும். உடனே அதிகரித்த பிணி நின்றுவிடும். உடனே மஞ்சள் சேர்த்து நீராடுதல் நன்றாயிருக்கும். சாம்பர் தீர்த்தம் அருந்த வேண்டும். நான்கு திசைகளிலும் சாம்பர் போடவேண்டும். உடனே குணமடைந்து விடும்.

## மக்கள் கடமை

ஸ்ரீ தேவியின் அன்பர்கள் சாம்பலைப் பெற்று அணிய வேண்டிய முறைப் பிரகாரம், உண்மை உறுதியுடன் திட்டு திருக்கில்லாமல் வேளை நாழிகை தவறாமல், தேவி நாமத்தினைக்கோரி அனுபவித்து வரவேண்டியது கடமை. அதனால் நாம் அடையும் பெரும் பாக்கியமானது ஏழு பிறவி எடுத்தாலும் நமக்கு அவளுடைய பாத தரிசனத்திற்காகப் பாத்திரமாயிருக்கும் பாக்கியம் பெறுவோம். நாம் முதலில் அடக்கம் என்னும் பொருளைத் திரட்டி விடுகிறோம். அதனால் ஆணவம், மாயை, காமியம் அடங்கிப் பொறுமை என்னும் சாந்தத்தினால் தீவினையனும், பெருங்கடலைக் கடக்கிறோம். உள்ளத்தில உறுதி நிலைநாட்டப்படுகிறது. இந்த உறுதிப்பாட்டினால் காம குரோதத்தினை வெல்ல முடிகிறது. அன்பு வளர்ச்சி அடைகிறது அதனால் பிற உயிர்கள் துன்பம் அடையப் பார்க்காமல் இந்த மனமானது, தான் எந்தப் பொருளை உறுதியாய் நம்பி நன்மைபெற்று வருகிறதோ அத்தேவதையால் அருளிய சாம்பலை அவர்களுக்கும் கொடுத்து முறைகளையும் சொல்லி

விடுகிறது. அதைப் பெற்றவர்களும், அதன் உண்மையைக் கண்டு அன்பு வைத்து ஒருவர் தந்த பொருளான சாம்பலைச் சிறிதளவு சிந்தித்து அர வணைத்தால் அந்த நோய் பறப்பது திண்ணம். அன்பு ஓங்க, இந்த அந்தராத்மா சுத்தமடைகிறது. பிறர் ஏதாவது தீங்கு செய்தாலும், அது தன்னுடையது அல்ல, வழி காட்டியாய் இருந்த ஸ்ரீ தேவி திருக் கரத்தால் அருளிய சாம்பலுடையது என்று க்ஷண நேரத்தில் பரப்பிரம்மத்தினிடம் ஒப்படைக்கிறது. அதனால் அறிவு வளர்ச்சி பெற்று அகத்தினுள்ளே ஊசலாடும்.

மனம் பரம்பொருளை நாடுகிறது. அப்பொருள் ஜோதியாய் நிர்மலமாய் பரந்த வெளியாயிருக்கு மிடத்தைக் காட்டுகிறது. அப் பொருளின் பெரும் பாக்கியத்தை அடைந்தவருக்கே ஸ்ரீ தேவியாரும் பரிபூர்ண பக்குவநிலை அடையச் செய்து எப்பேர்ப் பட்ட உத்தமர் அல்லது உத்தமி கரத்தால், அத்தேவி யர் அருளிய சாம்பலை எறிந்தாலும் எல்லா வினையும் காற்றுய்ப் பறக்கும், அவரிடமே தாய் உள்ளும் புற மிருந்து பேரின்பம் அடையும்படி வழி காட்டுவாள். இவைகளெல்லாம் குடும்பத்திலிருந்து ஈடு பட்டு வரு பவர்களுக்கே சீக்கிரம் சித்தி பெறும். இதற்காகக் குடும்பத்தினை வெறுத்துக் காடு செல்ல வேண்டிய தில்லை. தெய்வத்தின் பெருங்கருணை யாதென்றால், தன்னைப் போல் ஒத்திருக்கும் மக்களிடத்தில் யார் ஒருவர் பிரதிபலன் கருதாமல் தன் கடமையை அன் புடன் செய்து கொண்டு வருகிறார்களோ அவர்கள் தான் பேரின்பம் பெற்றவர்கள் ; அவரே தெய்வம் ;

தெய்வமே அவர். அன்பே சாம்பர் மயம். சாம்பரே அன்பு மயம். இவைகளை ஸ்ரீ தேவியார் குறம் கூறும் காலங்களில் அருகிலிருந்தால், நம் அம்மையார் சொல்லும் குற்றங்களைக் கேட்டு, ஓர் தனித்த இடத்தில் அமர்ந்து. சரிவர யோசனை செய்தால் படிப்படியாய் நாம் சீர்திருத்தம் பெறலாம்- நாம் சாம்பலை எடுக்கும்பேது எவ்வளவுக் கெவ்வளவு சீர் பெற்று நோய் அற்ற வாழ்வு வாழ்வோம்.

மக்களுக்கு ஸ்ரீ அம்மனின் திருக்குறத்தால் வினையற்று சீர்பெற்று நிற்குங் காலங்களில் என்றும் தீவினை நாடாமலிருப்பதற்காக அம்மனைக் கோரி சுகரவாரம் ஆதிவாரம் உபவாசமிருந்து அவள் ஆலயம் சென்று இரவு தங்கி வருதல் நலம்.

அதனால், நாம் ஏதாவது பிரார்த்தனைகள் செய்து கொண்டால் அதை உடனே செய்வதுதான் விசேஷம். நமக்குக் காரியங்கள் சித்தி பெற்றால் செய்யலாம் என்று எண்ணுவதே தவறு நினைத்தவுடனே செய்து முடிப்பதே பெருங்கடமை. நாம் இவைகளில் தான் பெருந்தவறு செய்தவர்களாகின்றோம். நாம் ஒருவருக்கு அன்னமிடுகிறோம் என்று சொல்லிவிட்டு, ஏமாற்றினால் நன்றாயிருக்குமா? இராது. அதனால் நாம் வாயால் கோரியதை செய்து முடிப்பதே விசேஷம். நம்மைக் காப்பதற்காக, அமமையார் பிரதி உபகாரமாக பால் பொங்கலிடுங்கள்! கூழ் வாற்றுங்கள! அபிஷேகம் செய்யுங்கள் என்று கேட்கவில்லை. செய்தாலும் செய்யாவிட்டாலும் உண்மை உறுதியுடன் கோரினாலே போதும் அதற்காகவே, நமக்கு வாக்கிட்டவாறு காப்பதற்குச் சித்தமாக மடியேந்திக்

கொண்டிருக்கிறாள். நம்மிடமே குறைபாடுகளை வைத்துக்கொண்டு, நமக்கு தேவி அதிக கஷ்டத்தைக் கொடுக்கிறாளே என்று நினைப்பதில் பயனில்லை. அவள் திருக்கரத்தால் சாம்பலைப் பெறறு அதை உண்மையுடன் கோரி உபாசித்தால், ஸ்ரீ சாம்பர் காக்கும் என்று சொல்லி அந்தப் பொறுப்பை நம்மிடமே ஒப்படைத்து விடுகிறாள். நாம் சாம்பலைத் தவறவிட்டால் அது நம்மைத் தவறவிடுகிறது. மேலும் அதிகமாய் விளக்கப்படுவதிலும் பயனிலலை. நம்மை நாமே சீர்திருத்தம் அடையும்படி விட்டுவிடுகிறாள். தாய் நீந்தத் தெரியாதவனை, நடுக்கடலில் விட்டாற் போல் விட்டு, நாம் கரையை அடைவதற்காகச் சாம்பர் கொடுத்தருள்கிறாள். நாம் இவ்வித வழிகளில் நடந்தால் 'சக்தியின்' அருளைப் பெற்று வாழலாம் என்பதை கவியரசர் ஸ்ரீ சி. சுப்பிரமணிய பாரதியார் ''சக்திக்கு ஆத்ம ஸமாப்பணம்'' என்று தோத்திரப் பாடல்களில் கூறியுள்ளார்.

ஆதிப்பரம் பொருளின் ஊக்கம்—அதை
அன்னை யெனப் பணிதல் ஆக்கம்
சூதில்லை காணுமிந்த நாட்டீர்—மற்றத்
தொல்லை மதங்கள் செய்யும் தூக்கம்
காலையிள வெயிலின் காட்சி—அவள்
கண்ணொளி காட்டுகின்ற மாட்சி
நீல விசும்பினிடை யிரவிற்—சுடர்
நேமி யனைத்து மவளாட்சி
நாராயண னென்று பழவேதம்—பிரமன்
நாடிய சக்தி திருப்பாதம்

சேரத் தவம்புரிந்து பெறுவார் —இந்த
செல்வ மறிவு சிவபோதம்
ஆதி சிவனுடைய சக்தி—எங்கள்
அன்னை யருள் பெறுதல் முக்தி
மீதி யுயிரிருக்கும் போதே—அதை
வெல்ல மாசக்தினுக்கு யுக்தி
மூர்த்திகள் மூன்றுபொரு ளொன்று—அந்த
மூலப்பொருள் ஒளியின் குன்று;
நேர்த்தி திகழுமந்த வொளியை—எந்த
நேரமும் போற்று சக்தி யென்று.

## 5. திருவிளக்கு தரிசனம்

திருவிளக்கு எனும் அழகு பொருந்திய ஜோதி என்பார்கள். பராசக்தி ஜோதி மயமாய் இருப்பவ ளென்று பெரியோர்கள் கூறியுள்ளனர். தினமும் ஜோதியை உதயத்திலும், உச்சியிலும், அந்தியிலும் தரிசனம் செய்தால ஸ்ரீ தேவியின் தரிசனத்தைக் கண்டதற்குச் சமமாகும்.

'ஜோதியே ! சுடரே ! சூழ் ஒளி விளக்கே, எனப் போற்றினர் மாணிக்கவாசகர். "தீப மங்கள ஜோதி நமோ நம" என்று அர்ச்சித்தனர் கருணைகவி அருணகிரியார். "அருட்பெருஞ் சோதிப்பெருக்கே! விளக்கே" என்றார் பாம்பன் அடிகளார். 'அருட் பெருஞ்சோதி தனிப்பெருங்கருணை' என்று ஸ்ரீ இராமலிங்க சுவாமிகளும் ஆண்டவனை ஜோதிமயமாக, வடலூரில் தைமாதப பௌர்ணமியில் கண்டு ஜோதி யுடன கலந்து விட்டார் என்று கூறப்படுகிறது. பத்தினிக் கண்ணகியும் தன்னுடைய பர்த்தா கோவலன்

தன் கால் சிலம்பை விற்கச் செல்லும்போது திரு விளக்கேற்றி வைத்து, தனக்கு ஏதாவது ஆபத்து வந்தால் இந்த சக்தியான திருவிளக்கு அணைந்து விடும் என்று சொல்லிவிட்டுப் போனதாகக் கூறப் படுகின்றன.

மதுராபுரி பட்டிணத்தில் கோவலனுக்கு ஆபத்து ஏற்பட்டபோது, சத்தியமாக விளங்கிய அத்திரு விளக்கு அணைந்து விட்டதாம். இந்த உலகம் நிலைத் திருப்பதற்குக் காரணமான பெருஞ் ஜோதியே சூரியன். சூரியச் சுடர் இல்லையானால் உலகல் எநத ஜீவராசியும் வாழ முடியாது. எனவேதான ஒவ் வொருவரும் உதயாதியில் சூரிய நமஸ்காரம் செய்து ஆதிசக்தியை தியானம் செய்வதுண்டு. பெருஞ் ஜோதியே மக்கள் ஆனந்தக் களிப்புடன கண்குளிர தரிசனம் செய்ய முடியாது. அதற்காக ஞானிகள இருள் காலங்களில் வெளிச்சத்திற்கும், பகல் காலங் களில் தரிசனத்திறகும், ஆலயஙகளிலும், இல்லங்களி லும், தீப தரிசன முறையைத் திருவிளக்கு மூலமாக ஏற்படுத்தினர்கள்.

வையம் தகளியா வார்கடலே நெய்யாக
வெய்ய கதிரோன் விளக்காக—செய்ய
சுடராழியான் அடிக்கேசூட்டினேன் சொல்மாலை
இடராழி நீங்குகவே என்று.

—பொய்கையாழ்வார்

சில ஞானிகள் மனத்தையே அகலாகவும், தவமே தைலமாகவும், அறிவே திரியாகவும், நிர்மாணித்து,

ஞானத்தைக் கோலாகவும், அமைத்து சிந்தனையால் தீபம் ஏற்றிப் பேரின்பப் பொருளை அடைந்திருக் கிறார்கள்.

அன்பே தகளியாய் ஆர்வமே நெய்யாக
இன்புருகு சிந்தை இடுதிரியா—நன்புருகி
ஞானச் சுடர்விளக்(கு) ஏற்றினேன் நாரணற்கு
ஞானத் தமிழ்புரிந்த நான்.

—பூதத்தாழ்வார்

இயற்கை ரூபமாய் இருக்கும் ஜோதியை சுக்கிர வாரங்களில் தரிசிப்பதைக் காமாட்சி அம்மன் தீபம் என்பார்கள். நாம் தாயின் சாம்பலைப் பெற்றவர்கள் தினமும் உதயத்திலும், உச்சியிலும், அந்தியிலும் தீப தரிசனம் செய்து ஜோதியின் அருளைப் பெற்று அர வணைப்பதே மேல். அதனால் நாம் எல்லோரும் ஒரு நல்ல சுபமுகூர்த்தத்தில் ஒரு மண் அகலோ, பித்தளை அகலோ, காமாட்சி அம்மன் விளக்கோ ஒன்று வாங்க வேண்டும். அன்றைய தினம் வீட்டைச் சுத்த மாய்க்கோ சாணமிட்டு மெழுகித் திருவிளக்கை அலம்பவேண்டும் பூஜைக்குரிய வெற்றிலை, பாக்கு, சாம்பிராணி, கற்பூரம, சாம்பிராணிவத்தி. வத்திநூல் வாழைப்பழம், தேங்காய், எலுமிச்சம்பழம் முதலியன வாங்க வேண்டும். மஞ்சள் அரைத்துப் பிள்ளையார் முன்பாக வைத்துக் குங்குமம் இடவேண்டும். புஷ்ப மும் போட வேண்டும். கொஞ்சம் பச்சரிசி எடுத்து மஞ்சள் கலந்து வைத்துக் கொள்ள வேண்டும். பிறகு விளக்கேற்றும் கருவிக்கு மஞ்சள் குங்கும மிடவேண் டும். சரியாகப் பகல் பன்னிரண்டு மணிக்கு வத்தி

யிட்டு நல்லெண்ணெய் இட வேண்டும். புஷ்பம் சாத்தவேண்டும் வெற்றிலை, பாக்கு முதலியவைகளை அலம்பிக்கொண்டு வரவேண்டும். இத்திருவிளக்கு முன்பாக வெற்றிலை, பாக்கு, பழம் முதலியவற்றை ஒரு தட்டில் வைக்க வேண்டும். சாம்பிராணி வத்தி ஏற்றி வைக்க வேண்டும். தூபகலசத்தில் நெருப்பு கொண்டு வந்து சாம்பிராணியைத் தூளாக்கிப் போட வேண்டும். சாம்பலில் சிறிதளவு கற்பூரம் வைத்து, ஸ்ரீ தேவி கருமாரியை நினைத்து தியானம் செய்து தீப மேற்றவேண்டும். சிறிதளவு சாம்பர் எடுத்து நான்கு திசையும் ஊதி, முகத்தல் அணிந்து கொண்டு, அவளது தாளில் பணிந்து நின்ருல் நமக்கு எத்தகைய சஞ்சலமும் அகன்று மனம தூய்மையடையும் என்பது திண்ணம். சற்று திருவிளக்கு முன்னிலையில் மன உறுதி உண்மையுடன் நின்று "தாயே உன்னிடம் எல்லாம் ஒப்படைத்தேன்" என்று தியானம் செய்தால், ஜோதியானது ஓங்கி நின்று பரிபூரணமாய் 'பந்துமேல் பந்தடித்து' அமர்ந்து எழுநது 'அஞ்சாதே!' என்பது போல் உத்திரவு கொடுக்கும். காலமும், வேளையும் நமக்கு அவள் வாக்கிட்டவாறு சரி வரவில்லையென்ருல் நமக்கு உத்திரவு கிடைப்பது அரிது. அதனுல் யார் இப்புனிதமான ஜோதியை உத்தரவு கேட்பதாயிருந்தால், ஆலயங்களுக்குச் சென்று திருவிளக்குகள் முன்பு நின்று ஆண்டவனைத் தியானம செய்து கொண்டு இப்பெருஞ் ஜோதியை நோக்குவார்கள். அவர்கள் நினைத்தபடி உத்திரவு தந்தால் அவர்கள் கோரிய காரியங்கள் சித்திபெறும். தினமும் நாம் தரிசனம் செய்வதாய் இருந்தால் தின

மும் நீராடி, பூஜை அறை ஒன்று நியமித்துக்கொண்டு தரிசனம் செய்வது விசேஷம். இதனால், நம் உள்ளம் தூய்மை அடைகிறது. நாம் சீர்பெற்று மக்கட்பேறு பெறுவோம். ஒரு வீட்டில் விளக்கு இல்லாவிட்டால் எப்படி மூதேவி அடைந்து விடுகிறதோ அவ்வாறே தேவியின் சாம்பலை வைத்துக்கொண்டும் தீபதரிசனம் செய்யவில்லை என்றால், நம் மனமும் மாசு அடைந்துவிடும். அதனால் நாம் எல்லாக் கஷ்டங்களையும் அனுபவிக்க நேரிடும். தாய் அருள் இருந்து நாம் உண்மை உறுதியுடனும் வேளை நாழிகை தவறாமலும், தீட்டு திடுக்கில்லாமலும், எங்கிருந்து பிரார்த்தனை செய்தாலும் ஸ்ரீ அம்பாள் வாக்கிட்டவாறு அருள் கிடைக்கும்.

கலச பூஜை ஸ்ரீ தேவியின் கலசத்தில் ஏழுவேம்பிலை சொருகியும உள்ளே மஞ்சள் நீர் நிரப்பி வாழை இலையில் பச்சரிமீது வைத்து, பூஜைக்கு வேண்டிய, வெற்றிலை, பாக்கு, பழம், தேங்காய், சிவப்பு புஷ்பங்களை வைத்து, ஆடி மாத சுக்ரவாரங்களிலும், தை மாத சுக்ரவாரங்களிலும் பொதுவாக எல்லா ஆதிவாரங்களிலும் பௌர்ணமி காலங்களிலும், பூச நட்சத்திரங்களிலும் பூஜையைச் செய்து வந்தால் தங்கள் இஷ்ட சித்திகளை அடைவர். மேற்கண்ட பூஜையை அதிகாலையில் சூரியோதயத்திற்குள் நீராடி குளிர்ந்த நீரில் சாம்பரை அருந்தி, நான்கு புறமும் சாம்பர் தூவி நல்ல மந்திரபூர்வமான பாடலால் பாடவும். இவ்வாறு செய்து வந்தால் எண்ணியவெண்ணமெல்லாம் கைகூடும். நம் கடமை ஸ்ரீ தேவியின் பாதம் பணிதலே யாகும்.

# ஸ்ரீ தேவி கருமாரி அம்மன்

# கவசம்

## பாராயணம் செய்யும் முறை

ஸ்ரீ தேவி அளித்த சாம்பலை முறைப்படி அனுபவித்த பிறகு தீபத்தின் முன்னிலையில் அதிகாலையிலோ மாலையிலோ இக்கவசத்தை ஐந்துமுறை படித்து கற்பூர தீப ஆராதனை செய்தல் நலம். படிக்குங் காலத்து முன் பின் மாறிப் படித்தல் கூடாது. தினந் தோறும் இக்கவசம் பாராயணம் செய்தால் எவ்வித துன்பங்களும் இல்லாமல் இன்பமடைந்து வாழ்வுற்று ஸ்ரீ தேவி கருமாரியம்மன் திருவருளுக்குப் பாத்திரராவார்கள் என்பது திண்ணம். வெளியூர் தனியாக இரவில் செல்லுங் காலத்தும் இவை பாராயணம் செய்யப் பட்டால் ஸ்ரீ தேவி அருகிலிருந்து காத்துக் கொண்டிருப்பாள். அன்பர்கள் சாம்பர் அரவணைத்து, இந்நூலையும் முறைப்படி தினமும் ஓதி, சகல யோகமிக்க பெருவாழ்வுற்று, தகைமை சிவஞான முக்தியும் பெறுவார்களாக.

—அருட்கவி ஸ்ரீதேவி கருமாரிதாஸர்

## விநாயகர் காப்பு

### நேரிசை வெண்பா

சீர்பெருகும் வேற்காட்டுத் தேவி கருமாரிப்
பேர்பெருகும் நற்கவசப் பாட்டனைத்தும்—ஏர்பெருகும்
வண்டமிழாற் பாட வலம்புரிவி நாயகனின்
புண்டரிகப் பாதம் புகல்.

### கவசம்

1. அருளதே வடிவ மாகி அருங்கலைத் தெய்வ மாகி
தெருள் நிலையுணர்த்தும் நாதச் செல்வியாம் வாலையாகி
கருமாரி நாமங் கொண்ட குண்டலி வேற்காட் டன்னை
திருவருள் மிகச்சு ரந்து சிரசினை நாளுங்காக்க.

2. ஆதிநாள் தோன்றும் அன்னை அகல்நெற்றி தன்னைக் காக்க
சோதியாம் வானக் கன்னி துணையிரு நுதலைக் காக்க
வேதியக் குமரி யென்றன் விழிகளைக் காக்க
நாதநா தாந்த நங்கை நாசியை நாளுங் காக்க.

3. இருநிதித் தலைவி யென்றன் இருசெவி களையுங் காக்க
ஒருமகள் வாயைக் காக்க உயர்வுறும் நாவும் பல்லும்
மருமகள் மகிழ்ந்து காக்க மயிலவன் தினமும் போற்றும்
கருமாரித் தேவி என்றன் கதுப்பையைக் காக்க காக்க.

4. ஈசனின் இடம் மர்ந்தாள் எழிற்கந்த ரத்தைக் காக்க
தேசொளிர் தோள்வி லாவைச் சீதேவி காக்க காக்க
மாசிலா மார்பை நாளும் மலைமகள் மகிழ்ந்து காக்க
ஆசறு முழங்கை தன்னை அணிபனை யாத்தாள் காக்க.

5. உலகெலாம் ஈன்ற சக்தி ஒளிர்ந்திடும் முன்கை காக்க
நிலமகள் கைத்த லத்தை நல்லருள் புரிந்து காக்க
மலைமகள் புறங்கை காக்க மலர்ந்திடும் விரல்கள் பத்தும்
அலைமகள் காக்க வேற்காட்டம்மையின் முதுகைக் காக்க

6. ஊண்கொளும் வயிற்றை நாளும் வேற்கண்ணாள் விரைந்து
காக்க
பாண்டவர் தூதன் தங்கை பெருமுந்திச் சுழியைக் காக்க
நாணினை நீலி காக்க நற்பீஜ வாணி தன்னை
காண்விழி நாகங் காக்க குதத்தினைக் குடிலை காக்க.

7. எழிலுடை யிடுப்பை யன்னை ஏகாத்தாள் காக்க காக்க
வழுவிலஞ் சகமி ரண்டை வள்ளிதெய் வானை காக்க
செழுமலர் அமர்ந்த தேவி சீரடித் தொடையைக் காக்க
தொழும்பரின் உளம்வாழ் சக்தித் திமிருமுன் றொடையைக்
காக்க.

8. ஏகமாம் எழுத்தில் வாழ்வோள் இருமுழங் காலைக் காக்க
காகுத்தன் தங்கை என்றன் கணைக்காலைக் காக்க காக்க
பாகமாம் பாடி ரண்டும் பரம்பரி காக்க காக்க
வேகங்கொள் குதிக்கால் தன்னை வேதனை யின்றேள் காக்க.

9. ஐந்தெழுத் தானேள் பாதத் தமைபத்து விரலுங் காக்க
செந்தனை ஈன்ற மாரி சீரகங் காலைக் காக்க
பாந்தளின் உருவங் கொண்டோள் பெருமுடல் முழுதுங்காக்க
பூந்தவ் கறைவோன போற்றும பயங்கரி நெஞ்சைக் காக்க.

10. ஒலியினுல் உளரத்துக் கூவும் ஊர்திரி பூதப் பேய்கள்
பலிகொளும் அரக்கப் பேய்கள் பற்பல பேய்கள் எல்லாம்
கலிகொளக் காளி காக்க கீழவர் செய்யுஞ் சூன்யம்
வலிபெறு மந்த்ர தந்த்ரம் வருத்திடா தனை காக்க.

11. ஓங்கியே வளைக்கும் வல்வில் உவணிவேல் சூலந் தண்டம்
பாங்குறும் எ.்.கும ஈட்டி பரசுடன் தடிகள் யாவும்
தாங்கியே பகைவர் என்மேல் தாக்கிடுங் காலந் தன்னில்
தீங்குகள் நேரா வண்ணம் திருவேற்காட்டரசி காக்க.

12. ஔவியச் சிந்தை யுள்ளோர் அசடர்கீழ் அற்ப ராதி
ஔவையின் சொற்கள் தேரா தளவிலாக் கொலைகள் செய்வோர்
தெவ்வர்கள் சூழ்ந்து நின்று தீதினை யியற்றுங் காலை
கௌமாரி தேவி யம்மை கருணையாற் காக்க காக்க.

13. கரிகளுஞ் சிங்கம் வேங்கை கறத்துள கரடி நாய்கள்
புரிவிடப் பணிகள் ஈட்டப் புலிகள் மார்ச் சாலஞ் சம்பு
குரங்குடன் காட்டில் வாழும் கூட்டங்க ளனைத்துஞ் சூழ்ந்து
புரிகின்ற திதி னின்றும் புவனைத்தாய் காக்க காக்க.

14. யகரப்போற் றழுவுங் காலை ஞானபூ ரணியாள் காக்க
வகையுள நண்டுக் காலி வலியுறு தேளுஞ் செய்யான்
சிகரியும் முதலா யுள்ள தீமைசெய் உயிர்கள் தன்னால்
சகமிசை யூறி லாமல் சங்கரி காக்க காக்க.

15. சலசல வென்ற வோசைச் சலத்திலுய் உயிர்க் கூட்டங்கள்
நிலத்தினில் வாழும் தீதே நிறைந்திடும் பிராணி யாகும்
குலத்தினால் நானி டுக்கண் கொண்டிடா தெந்த ஞான்றும்
கலைபல உணர்த்தும் ஞானி கருமாரி காக்க காக்க.

16. ஞமலியம் பரிய னின்ருய் நவக்கோளின் செயலைக் காக்க
தமதிரு விழிநோ யோடு சார்ந்திடுஞ் சூலைக் கிராணம்
திமிர்நிறை வாதஞ் சோகம் சிரமடிச் செவியின் நோயும்
எமைய ணு காம லென்றும் எழிற்கரு மாரி காக்க.

17. டமருக வாத்தி யத்தின் தடியைப்போ லிடிக்க வல்ல
எமசிர சிடிநோ யோடு நிமிருரு திருத்தும் வெட்டை
திமிருறும் குன்ம நோயும் சிறுகுட லீழை காசம்
எமையடை யாம லென்றும் எங்கரு மாரி காக்க.

18. சணந்தனில் கொல்லு கின்ற சன்னியுங் குஷ்ட நோயும்
சுணக்கஞ்செய் மாசு ரங்கள் சுடுமூலம் முளைத் தீ மந்தம்
பிணக்குச்செய் தல்லல் காட்டும் பெருவலிக் கைகால்
[நோயாம்
பிணிப்பிழை யெய்தா வண்ணம் போர்மகள் காக்க காக்க.

19. தவக்கஞ்செய் சயித்திய வாதம் சார்ந்திடு மரோச
[கம்மெய்
கவறச்செய் மூலச்சூடும் சேரிளைப் புடற்று விக்கும்
அவதியே யாக்கும் பேதி அண்டவா தங்கள் சூலை
குவிப்பிணி சேரா வாறு குமரியங் காளி காக்க.

20. நவையுறு பாண்டு சோகம் நமைப்புள கிரந்தி விக்கம்
குவிந்துள கருமை வெண்மை கூர்ந்திடுந் தொழுநோய்
[விக்கல்
இவைபல ரோக மெல்லாம் எள்ளள வெய்தா வாறு
சிவசக்தி வேற்காட் டுத்தாய் தினமுமென் னுடலைக் காக்க.

21. பற்களைக் கடித்துக் காட்டிப் பெருமீசை துடிதுடிக்க
தெற்றிய சூல மேந்தித் தென்னவன் வருகுங் காலை
புற்றினுள் அரவாய் வாழும் பூவையாங் கருமா ரித்தாய்
சற்றுந்தா மதமில் லாமல் தண்ணளி சுரந்து காக்க

22 மலையினும் மரத்தின் மீதும் மாநிலப் பரப்பி லெங்கும்
நிலையொளி நெருப்பின் மீதும் நெடியதோ ருர்தி மீதும்
உலைஞர்வாழ் விண்ணின் மீதும் காட்டிலும் முழையினுள்ளும்
நிலைகுலை யாம லென்றன் நீலியாம் நன்றாய் காக்க.

23. யகரம்போற் சூல மேந்தும் அம்பிகை முன்னே காக்க
சகமதை யளந்தோன் றங்கை சார்பினனே நன்கு காக்க
யுகந்தொறும் காக்கும் அன்னை உரைநடு நிலையிற் காக்க
பகர்ந்திடும் கீழ்மேல் தன்னில் பார்மகள் காக்க காக்க.

24. ரதமதி லேறுந் தேவி இந்திர திக்கிற் காக்க
சுதமதி யமைந்த சூலி சுக்கிரன் றிக்கிற் காக்க
கீதத்தில் வாழுஞ் செல்வி காலனின் றிசையிற் காக்க
நாதத்தில் ஒளிரும் நங்கை நிருதியின் றிக்கிற் காக்க.

25. லகரத்தி னுருவைக் கொண்ட லீலையாள் குடத்தில் காக்க
பகடினூர் வாழ்சா முண்டி புகல்வாயு திசையிற் காக்க
கோகுலக் கண்ணன் றங்கை குபேரனின் றிக்கிற் காக்க
தகரத்தின் குழலாள் கௌரி தகுசனி மூலை காக்க.

26. வளமுறும் இளமைக் காலம் வாராகி காக்க காக்க
களங்கமில் வாலி பத்தில் கருமாரி காக்க காக்க
உளத்தினில் நினைக்கும் போதும் உணர்வுடன் நடக்கும் [போதும்
களத்தினில் நிற்கும் போதும் காக்க காக்க.

27. அழகுடன் அறிவைத் தந்து அநுபவை காக்க காக்க
பழகுமால் விளைக்குங் காலும் பாலுடன் ஊணுண் போதும்
அழகிய தேவர் பாதம் அன்புடன் போற்றும் போதும்
செழுமைசே ரருள்புரிந்து சீர்கரு மாரி காக்க.

28. வையிலா வயோதி கத்தில் வாழ்த்தாய் காக்க காக்க
ஒளி நல்கும் கதிரின் முன்னே ஓங்காரி காக்க காக்க
வெளியினில் கதிர் வருங்கால் வேற்கண்ணி காக்க காக்க
அளியுடன் எந்த ஞான்றும் அன்னபூரணியாள் காக்க

29. இறப்பிறப் பில்லா வம்மை இரவினிற் முற்பால் காக்க
சிறப்புறும் விசாலாட் சித்தாய் சீரிருட் பிற்பால் காக்க
அறம்புரி காமாட் சித்தாய் அடை நடு நிசியிற் காக்க
திறம்பாத நிலையி லென்றுந் திருவேற்காட் டரசி காக்க.

30. இனமாகும் அடியரோடும் இணக்குமீ னாட்சி காக்க
தனிமையுற் றிருக்கும் போதும் சபையினிற் பேசுங் காலும்
மனம்போன போக்கிற் சென்று மதியழிந் திடுங்கா லத்தும்
தினந்தோறும் கருமா ரித்தாய் திருவடி காக்க நன்றே.

நாமாவளி

ஓம் என்றாலே ஓடியும் வருவாள் அன்னை பராசக்தி
ஆம் என்றாலே ஆடியும் வருவாள் ஆதி பராசக்தி —(ஓம்)

ஐங்கர நாதனை ஆதியில் தந்தாள் அன்னை பராசக்தி
அவனியில் துன்டம் போக்கிட வந்தாள் ஆதி பராசக்தி (ஓம்)

தண்டைச் சிலம்பும் குலுங்கிட வந்தாள் அன்னை பராசக்தி
தரணியில் மக்களைக் காத்திட வந்தாள் ஆதி பராசக்தி—(ஓம்)

வேலவன் தன்னை உலகினில் தந்தாள் அன்னை பராசக்தி
குறமும் உரைத்து அருளையும் தந்தாள் ஆதி பராசக்தி —(ஓம்)

மஞ்சளும் கனியும் தந்திட வந்தாள் அன்னை பராசக்தி
மக்களின் பிணியைப் போக்கிட வந்தாள் ஆதி பராசக்தி
—(ஓம்)

கரும்பாம்பாய் வந்து படமும் எடுத்தாள் அன்னை பராசக்தி
கருமாரி என்றே பெயரும் எடுத்தாள் ஆதி பராசக்தி —(ஓம்)

## கற்பூர நாயகியே

கற்பூர நாயகியே! கனகவல்லி!
காளி மகமாயி! கரு மாரியம்மா!
பொற்கோவில் கொண்ட சிவ காமியம்மா!
பூவிருந்த வல்லி தெய்வ யானையம்மா!
விற்கோல வேதவல்லி! விசாலாட்சி!
விழிக்கோல மாமதுரை மீனாட்சி!
சொற்கோவில் நானமைத்தேன் இங்குதாயே!
சுடராக வாழ்விப்பாய் என்னை நீயே! (கற்பூர)

புவன முழுதாளுகின்ற புவனேஸ்வரி !
புரமெரித்தோன் புறமிருக்கும் பரமேஸ்வரி !
நவரசமாய் வடிவாகும் மகேஸ்வரி !
நம்பினவர் கைவிளக்கே சர்வேஸ்வரி !
கவலைகளைத் தீர்த்துவிடும் காளீஸ்வரி !
காரிருளின் தீச்சுடரே ஜோதீஸ்வரி !
உவமானப் பரம்பொருளே ஜகதீஸ்வரி !
உன்னடிமைச் சிறியேனை நீயாதரி ! (கற்பூர)

கண்ணிரண்டும் உன்னுருவே காண வேண்டும் !
காலிரண்டும் உன்னடியே நாடவேண்டும் !
பண்ணமைக்கும் நாவுனையே பாடவேண்டும் !
பக்தியொடு கையுனையே கூடவேண்டும் !
எண்ணமெலாம் உன்நினைவே ஆடவேண்டும் !
இருப்பதெல்லாம் உன்னுடைய தாகவேண்டும் !
மண்ணளக்கும் சமயபுரி மாரியம்மா !
மகனுடைய குறைகளையும் தீருமம்மா ! (கற்பூர)

நெற்றியினுன் குங்குமமே நிறைய வேண்டும் !
நெஞ்சினிலுன் திருநாமம் வழிய வேண்டும் !
கற்றதெல்லாம் மேன்மேலும் பெருக வேண்டும் !
கவிதையிலே உன் நாமம் வாழவேண்டும் !

சுற்றமெலாம் நீடுழி வாழவேண்டும் !
ஜோதியிலே நீயிருந்து ஆளவேண்டும் !
மற்றதெலாம் நானுனக்குச் சொல்லலாமா !
மடிமீது பிள்ளை என்னைத் தள்ளலாமா ! (கற்பூர)

அன்னைக்கு உபசாரம் செய்வதுண்டோ ?
அருள் செய்ய இந்நேரம் ஆவதுண்டோ ?
கண்ணுக்கு இமையன்றிக் காவலுண்டோ ?
கன்றுக்குப் பசுவன்றிச் சொந்தமுண்டோ ?
முள்ளைக்கும் பிள்ளைக்கும் பார்ப்பதுண்டோ ?
முழுமைக்கும் நீ எந்தன் அன்னையன்றோ ?
எண்ணைக்கும் விளக்குக்கும் பேதமுண்டோ ?
என்றைக்கும் நானுந்தன் பிள்ளையன்றோ ? (கற்பூர)

அன்புக்கே நானடிமை ஆகவேண்டும் !
அறிவுக்கே என்காது கேட்கவேண்டும் !
வம்புக்கே போகாமல் இருக்கவேண்டும் !
வஞ்சத்தை என்னெஞ்சம் அறுக்கவேண்டும் !
பண்புக்கே உயிர்வாழ ஆசைவேண்டும் !
பரிவுக்கே நானென்றும் பணியவேண்டும் !
என்பக்கம் இவையெல்லாம் இருக்கவேண்டும் !
என்னோடு நீஎன்றும் வாழவேண்டும் ! (கற்பூர)

கும்பிடவோ கையிரண்டு போதவில்லை!
கூப்பிடவோ நாவொன்றால் முடியவில்லை!
நம்பிடவோ மெய்யதனில் சக்தியில்லை!
நடந்திடவோ காலிரண்டால் ஆகவில்லை!
செம்பவள வாயழகி! உன்னெழிலோ!
சின்ன இரு கண்களுக்குள் அடங்கவில்லை!
அம்பளவு விழியாளே! உன்னை என்றும்
அடிபணியும் ஆசைக்கோர் அளவுமில்லை! (கற்பூர)

காற்றாகிக் கனலாகிக் கடலாகிறாய்!
கயிறாகி உயிராகி உடலாகிறாய்!
நேற்றாகி இன்றாகி நாளாகிறாய்!
நிலமாகி பயிராகி உணவாகிறாய்!
தோற்றாலும் ஜயித்தாலும் வாழ்வாகிறாய்!
தொழுதாலும் அழுதாலும் வடிவாகிறாய்!
போற்றாத நாளில்லை தாயே உன்னை!
பொருளோடு புகழோடு வைப்பாய் என்னை! (கற்பூர)

—அவினாசிமணி

வைரம் அச்சகம், 50, பெல்ஸ் சாலை, சென்னை-600 005.

# திருவிளக்கு பஜனை

1. திருவிளக்கே திருவிளக்கே
   தேவி பராசக்தி திருவிளக்கே
   தேவியின் வடிவே திருவிளக்கே
   தேவியே உனக்கு நமஸ்காரம்

2. இருளை அகற்றும் திருவிளக்கே
   இன்பம் அளிக்கும் திருவிளக்கே
   எங்கும் ஒளிதரும் திருவிளக்கே
   லக்ஷ்மி உனக்கு நமஸ்காரம்

3. மங்கள ஜோதியாம் திருவிளக்கே
   மாலையில் ஒளிதரும் திருவிளக்கே
   காலையில் ஒளிதரும் திருவிளக்கே
   சரஸ்வதி உனக்கு நமஸ்காரம்

4. திருமகள் வடிவே திருவிளக்கே
   தேவரும் பணியும் திருவிளக்கே
   தெள்ளிய ஜோதியே திருவிளக்கே
   ஸாரதே உனக்கு நமஸ்காரம்

5. அஷ்டலஷ்மி வடிவே திருவிளக்கே
ஆனந்த நர்த்தினி திருவிளக்கே
ஆலயபூஷணி திருவிளக்கே
ஆதி பராசக்தி நமஸ்காரம்

6. பாக்ய லஷ்மியாம் திருவிளக்கே
பக்தியை அளித்திடும் திருவிளக்கே
பதவியைத் தந்திடும் திருவிளக்கே
பவானி உனக்கு நமஸ்காரம்

7. ஜெகமெலாம் விளங்கும் திருவிளக்கே
ஜெகதீஸ்வரி வடிவே திருவிளக்கே
அழகை அளிக்கும் திருவிளக்கே
அம்பா உனக்கு நமஸ்காரம்

8. சௌபாக்ய ரூபிணி திருவிளக்கே
சந்தான பலம்தரும் திருவிளக்கே
சம்பத்தை அளிக்கும் திருவிளக்கே
சக்தியே உனக்கு நமஸ்காரம்
ராஜராஜேஸ்வரி நமஸ்காரம்

—பக்தர்

உன்னை நாங்கள் காண்பதற்கும்—உந்தன்
சொல்லைக் கேட்பதற்கும் என்ன தவம்
செய்தோமம்மா கருமாரி அம்மா
எங்கள் குறை தீருமம்மா கருமாரி அம்மா.

தன்னை நிகரில்லாது தானே முளைத்தவளே
சர்பஉரு கொண்டவளே கருமாரி அம்மா
தாங்கொணு துயர் துடைப்பாள் கருமாரி அம்மா.

முன்னைப்பழம் பொருளே பின்னைப் புதுமையிலே
இன்னருளைத் தந்திடுவாய் கருமாரியம்மா
எங்கள் மனம் களித்திடவே கருமாரியம்மா.

திருவேற்கா டெல்லைவிட்டு சீக்கிரமாய் வந்திடுவாய்
சீரான வாழ்வளிப்பாள் கருமாரி அம்மா
இந்த சீவர்களைக் காத்திடுவாய் கருமாரி அம்மா.

பொன்னை நாங்கள் கோரவில்லை
பொருளை நாங்கள் கேட்கவில்லை. உந்தன்
துணை வேண்டுமம்மா கருமாரியம்மா
நீ உவப்புடனே வந்திடுவாய் கருமாரி அம்மா.

மருத்துவனை நாடவில்லை, மருந்தேதும்
உண்ணவில்லை, அருந்துவதுன் சாம்பல்
நீறே கருமாரி அம்மா. அது அமிர்தம்
போல் பிணிதீர்க்கும் கருமாரி அம்மா.

உன்னையே நம்பி வந்தோம் உள்ளத்
திலே உறுதி கொண்டோம். பின்னை
யேதும் துன்பம் உண்டோ கருமாரி அம்மா
இன்னும் மனம் இரங்கலையோ கருமாரி அம்மா.

வழிக்குத்துணை வந்திடுவாள் வழக்கின்றிக்
காத்திடுவாய் வழிதோறும் பாராட்டவே
கருமாரி அமமா உனபகதர்க்கு அருள
புரிவாய் கருமாரி அம்மா.

சாம்பலே மந்திரமாம் சாம்பலே எந்திரமாம்.
சாம்பலே எல்லாமுமாம் கருமாரி
அம்மா. அந்த சாம்பலை அளித்திடுவாய்
கருமாரி அம்மா.

P. லம்போதர பாகவதர்

திருவேற்காடு
அருள்மிகு தேவி கருமாரி அம்மன் திருக்கோயில்
திருச்சாம்பர்ப் பொய்கைத் திருப்பணி
அன்பர்களுக்கு வேண்டுகோள்

அன்புடையீர் !

திருவேற்காடு அருள்திரு தேவி கருமாரி அம்மன் திருச்சாம்பர்ப் பொய்கைத் திருப்பணி துவக்க விழா தமிழ்நாடு கூட்டுறவு அமைச்சர் மாண்புமிகு திரு சி.பா ஆதித்தனார் அவர்கள் தலைமையில், தமிழ்நாடு அறநிலையத் துறை அமைச்சர் மாண்புமிகு திரு. மு. கண்ணப்பன் அவர்கள் 5-6-1972-ல் காலை 9-30 மணிக்குத் துவக்கி வைத்தார். அந்த திருச்சாம்பர்ப் பொய்கைத் திருப்பணியை நிறைவு பெறச் செய்வதற்குத் தாங்கள் தங்களால் இயன்ற பொருளுதவி செய்து இந்த ஆண்டுக்குள் திருப்பணியை நிறைவேற்றி அடுத்த ஆண்டில் பெருந்திருவிழா நடைபெறச் செய்து தேவியின் திருவருளைப் பெறுமாறு கோருகின்றனம்.

1 படி (1 அடிகல்) ரூ. 10
10 படி (10 அடிகல்) ரூ. 101
(பெயர் பொறிக்கப்படும்).

திருச்சாம்பர்ப் பொய்கைத் திருப்பணிக்குழுத் தலைவர்
தவத்திரு சுவாமி இராமதாசர், தேவி உபாசகர்.

இந்திய அரசாங்க வரிவிலக்கு உத்தரவு எண்
389 (F. No. 176/18/73—II (AI) :